[18th September 1958

*School Fees.*

* 280 *Q.*—SRI P. G. MANICKAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) எத்தனை ரூபாய்க்கு அதிகமாக வருஷ வருமானமுள்ள ஹரிஜன பெற்றோர்கள் பள்ளிக்கூடங்களிலே படிக்கும் அவர்களுடைய குழந்தைகளுக்குக் கல்விக் கட்டணத் தொகை செலுத்தவேண்டும்?

(ஆ) இவ்வாறு கல்விக் கட்டணத் தொகை செலுத்தும் ஒரு ஹரிஜன குடும்பத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட குழந்தைகள் பள்ளிக்கூடங்களிலே படித்தால் இப்பெற்றோரின் வருமானம்பற்றி எவ்வாறு குறிப்பிடப்படவேண்டும்?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) Students belonging to the Scheduled Castes and studying in Secondary Schools are exempted from payment of tuition fees provided the income of their parents or guardians does not exceed Rs. 1,200 per annum.

(*b*) The annual income limit prescribed is independent of the number of children of the parent. The question of how a parent having more than one child, whose income exceeds the prescribed limit, should indicate his income does not arise.

SRI P. G. MANICKAM: 100 ரூபாய் வருமானம் வரக்கூடிய ஒரு ஹரிஜன் அவருடைய பெரிய குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டியதாக இருக்கிறது. அவருடைய குடும்பத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட குழந்தைகள் படிக்க வேண்டியதாக இருக்கிறது. அதனால் அவர் பள்ளிக்கூடச் சம்பளம் கட்ட முடியாத நிலைமையில் கஷ்டப்படுகிறார். அவருக்கு பள்ளிக்கூடச் சம்பளம் கட்டுவதற்கு அவருடைய நிலைமையை கவனித்து அவருக்கு வேண்டிய சலுகையை அளிக்க சர்க்கார் முன் வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: குழந்தைகள் அதிகமாக இருக்கிறது என்பதற்காக சர்க்கார் இம்மாதிரியெல்லாம் சலுகைகள் கொடுத்துக் கொண்டிருக்க முடியாது. குழந்தைகளை யொட்டி அல்லாமல் அவரவர்களுடைய வருமானத்தையொட்டித்தான் அவர்களுக்கு சலுகைகள் கொடுக்கப்பட்டு வருகிறது.

SRI S. PAKKIRISWAMI PILLAI: இப்பொழுது விலைவாசி உயர்வின் காரணமாக பஞ்சப்படி மாத்திரம் சுமார் ஐந்து கோடி ரூபாய்க்கொடுக்கப்படுகிறது. அதுவும் மூன்று அணு வீதம் புள்ளி விவரம் எடுக்கப்பட்டு அந்த விவரப்படி கொடுக்கப்பட்டு வருகிறது. அதன் காரணமாக அவர்கள் ரூ. 1-2-0 சுலபமாகக் சம்பாதிக்க முடிகிறது. இப்பொழுது ரூபாய் 100 சம்பளம் வாங்குகிறவர்களுக்கு சலுகை என்று இருக்கிறது. அந்த லிமிட்டை 150 ரூபாய் என்ற அளவிற்கு உயர்த்துவதற்கு அரசாங்கம் முன்வருமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: இப்பொழுது ரூ. 1,200 லிமிட் என்று வைத்திருக்கிறார்கள். அதாவது நான்கு ரூபாயாவது சம்பாதித்தால் 100 ரூபாய் சம்பாதிக்கலாம் என்று நிர்ணயித்திருக்கிறார்கள். அவர்களுக்குக்கொடுக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. ஆகையால் தான் ரூபாய் 1,200 என்ற அளவு வைக்கப்பட்டிருக்கிறது.

SRI N. MARUDACHALAM: கல்வி கட்டணம் கட்டுவதற்கு சலுகை காட்டுவது ரூ. 1,200 வருமானம் உடையவர்களுக்கு. அப்படியில்லாமல் அந்த கட்டத்தை ரூபாய் 1,500க்கு உயர்த்த வேண்டும் என்று கோவையிலிருந்து ஹரிஜன மாநாடு தீர்மானித்து அனுப்பியிருக்கிறார்கள். அதன் பேரில் ஏதாவது அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்களா என்பதை அறிய விரும்புகிறேன்?

18th September 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : அப்படிப்பட்ட தீர்மானம் எதுவும் வந்ததாகத் தெரியவில்லை. ஆனால் கல்லூரியில் படித்து வரும் மாணவர்களுக்கு 1,500 ரூபாயாக உயர்த்தப்பட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறது.

SRI V. SANKARAN : இனிமேல் அதிகப்படியான குழந்தைகளைப் பெறுகிறவர்களுக்கு இந்தச் சலுகை காட்டா விட்டாலும் ஏற்கெனவே அதிகப்படியாக குழந்தைகளைப் பெற்றிருக்ககூடியவர்களுக்குக் கொஞ்சம் சலுகை கொடுக்க அரசாங்கம் முன் வருமா என்பதை அறிய விரும்பு கிறேன்.

MR. SPEAKER : The hon. Member is asking about birth control.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர் அவர்கள் இதில் இவ்வளவு அக்கறை கொண்டிருப்பதற்கு அவரை நான் பாராட்டுகிறேன்.

SRI K. B. S. MANI : இப்படிப்பட்ட சலுகை பிற்பட்ட மக்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்தும் இன்னும் பல பள்ளிக்கூடங்களில் நாலாவது பாரத்திற்கு மேல் படிக்கும் மாணவர்கள் சம்பளம் கட்டவேண்டும் என்று சொல்லுகிறார்கள். அதைப்பற்றி இந்த அரசாங்கம் ஏதாவது நடவடிக்கை எடுக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது கொடுக்கப் பட்டிருக்கும் சலுகையெல்லாம் மூன்றாவது பாரம் வரையில்தான். நாலாவது பாரத்திற்கு சலுகை கொடுக்கப்படவில்லை. ஆகையால் தான் சம்பளம் கட்டவேண்டும் என்று சொல்லுகிறார்கள் என்று நினைக்கிறேன்.

*Handicrafts.*

* 281 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் ஜில்லாவிலே Handicrafts Board-ன் கீழ் முதலாவது 5 ஆண்டு திட்ட காலத்திலே எந்தெந்த இடங்களிலே என்னென்ன கைத்தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டன ?

(ஆ) இதற்காக ஒதுக்கப்பட்ட தொகை எவ்வளவு ?

(இ) இரண்டாவது 5 ஆண்டு காலத்திலே என்னென்ன தொழில் கள் எந்தெந்த இடங்களிலே ஆரம்பிக்கப்படுவதற்காகத் திட்டமிடப்பட்டிரு கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Nil.

(*b*) Does not arise.

(*c*) The following schemes have been implemented so far in Coimbatore district for the development of handicrafts :—

(1) Training Centre for the manufacture of wooden toys at Erode.

(2) Training Centre for sewing and embroidery at Gobichettipalayam.

(3) Demonstration Centres for palmyra fibre extraction at Chennimalai, Perundurai and Modakurichi.

(4) Training Centres for bamboo articles at Chinnakaliyur and Kongarapalayam.